# பகவத் பாதை
Bagavath Path

இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு

பாதை - 1 | 2012 / ஏப்ரல் | மலர் - 7

தனிச்சுற்றுக்கு மட்டும்



Sri Bagavath

‘இந்தக் கணத்தை, எந்த மாற்றமும் செய்யாது, ஏற்றுக்கொள்வதைத் தவிர நமக்கு வேறு எந்த வழியும் கிடையாது’ என்பதைப் புரிந்து கொள்வதுதான் ஞானம்.

– ஸ்ரீ பகவத்



# ஞானமும் விடுதலையும்

- ஸ்ரீ பகவத்

ஆன்மீகத்தின் உச்ச நிலை என்பது ஞானம் அல்ல. ஆன்மீகத்தின் உச்சநிலை விடுதலை.

மனித வாழ்வின் இலக்கு ஞானத்தை அடைவது அன்று. விடுதலை அல்லது முக்தியை அடைவதே இலக்கு.

ஞானம் என்பதும், விடுதலை என்பதும் கடினமானதா? அடைவதற்கு அரிதானதா?

நிச்சயமாக அது கடினமான ஒன்றல்ல. ஆனால் அது கடினமாக்கப்பட்டுவிட்டது.

காரணம் :- ஞானம் என்றால் என்ன என்பது பலராலும் சரியாக விளக்கப்படவில்லை.

நாம் அடைந்திடவேண்டிய இறுதி நிலையான முக்தி அல்லது விடுதலை நிலையை ‘ஞானம்’ எனப் பெயரிட்டு பலரும் விளக்க ஆரம்பித்துவிடுகின்றனர்.

ஞானத்தையும், விடுதலையையும் பிரித்து அறிந்திடத் தவறுவோமாயின், பலருக்கும் குழப்பம் தான் ஏற்பட்டுவிடும்.

விடுதலை என்பது, அதனளவில் மிகவும் எளிதானது. அதுபோல், ஞானம் என்பதும் அதனளவில் மிகவும் எளிமையானது. ஆனால் இரண்டையும் இணைத்து வைத்து நாம் குழப்பிக்கொண்டால், பிறகு அதுதான் கடினத்திலும் கடினமான ஒன்றாகிவிடுகின்றது. விடுதலை என்பது, நமது மனதின் (Mind) இயற்கையான நிலை. அதுதான் நமது உணர்வு நிலையின் (Conscious) இயற்கையான நிலை.

நமது மனது எப்போதும் இயங்கிக்கொண்டே இருக்கின்றது. நமது உணர்வு நிலை எப்போதும் இயங்கிக்கொண்டே இருக்கிறது. எப்படி ஓர் ஆறு எப்போதும், புத்தம் புதுத் தண்ணீருடன் ஓடிக்கொண்டிருக்கின்றதோ, அப்படித்தான் நமது மனதும் புத்தம் புது உணர்வுகளுடன் பிரவகித்துக் கொண்டே இருக்கிறது.

இதுதான் நமது மனதின் பிரவாகம். நமது உணர்வுகளின் பிரவாகம். இதுதான் விடுதலையின் யதார்த்தம். இது தான் நமது இயல்பான நிலை. இதை நாம் முயன்று அடையத்தேவையில்லை. நாம் இயற்கையாகவே, விடுதலை நிலையில்தான் இருக்கிறோம்.

பிறகு எங்குதான் பிரச்சினை உருவாகின்றது?

காலையில் எழுந்தது முதல் இரவு படுக்கைக்குச் செல்லும் வரை நமக்கு ஓராயிரம் நினைவுகள் ஏற்படுகின்றன. அதுபோல் நமக்கு ஓராயிரம் உணர்வுகள் ஏற்படுகின்றன.

இந்த இந்த நினைவுகள்தாம் நமக்கு ஏற்படவேண்டும், இந்த இந்த உணர்வுகள் தாம் நமக்கு ஏற்படவேண்டும் என்று, நாமாக முயன்று அந்த நினைவுகளையும் உணர்வுகளையும் நாம் கொண்டு வந்துள்ளோமா? அல்லது அவையாக நமக்கு ஏற்பட்டுள்ளனவா?

அவை அனைத்தும் தாமாக ஏற்பட்டுள்ளன. அவை அனைத்தும் நமக்குள்ளேயே ஏற்பட்டாலுங்கூட, நாம் அவற்றுக்குப் பொறுப்பு கிடையாது.

நமது உணர்வுபூர்வமான பங்களிப்பின்றி (No Concious participation ) அவை யாவும் தாமாக நமக்குள் ஏற்படுகின்றன. ஏதோ ஒரு சூழ்நிலையில் நமக்கு மனத்துயரம் ஏற்படுவதாக வைத்துக்கொள்வோம். நமக்கு ஏற்பட்ட மனத்துயரத்துக்கு ஏதாவது ஒரு சூழ்நிலை மட்டுமே கூட காரணமாக இருக்கலாம். ஆனால் அந்த நிலையிலும், நமக்கு ஏற்படும் மனத்துயரம், தாமாக ஏற்படுகிறது.

நாமாக முயன்று அந்த மனத்துயரத்தை ஏற்படுத்தவில்லை. நமக்கு அப்படி மனத்துயரம் ஏற்பட்டநிலையில் அந்த மனத்துயரத்திலிருந்து விடுபடவேண்டும் என்ற எண்ணமும் நம்மையறியாமல் ஏற்படுகின்றது.

நமக்கு ஏற்படும் அத்தனை நினைவுகளும், உணர்வுகளும் ஒரு மலையைப் போன்று அமைந்துள்ளன. நமக்கு மனத்துயரம் ஏற்படும்போது, அந்த மனத்துயரத்திலிருந்து விடுபடவேண்டும் என்று நமக்கு ஏற்படும் எண்ணம் என்பது அந்த மலையில் முளைத்த ஒரு சிறிய புல்லைப் போன்று உள்ளது.

அந்தப்புல், தன்னால் அந்த மலையைப்புரட்டிச் சமப்படுத்திவிடமுடியும் என்று கற்பனை செய்து கொள்கிறது. நாம் அந்தப் புல்லுக்கு உயிர் கொடுத்து, அப்படி மலையைப் புரட்டும் பணிக்கு ஊக்கம் கொடுத்துவிடுகிறோம்.

அது சாத்தியம் இல்லாவிட்டாலும், நாம் போராடிவிடுகிறோம். நமக்கு ஏற்படும் உணர்வுகளும், நினைவுகளும் மலையளவு வந்தாலும், அவையனைத்தும் ஆறாக ஓடி மறைந்துவிடுகின்றன. தாமாக ஓடி மறைந்துவிடுகின்றன. அவற்றை நாம் அப்புறப்படுத்தத் தேவையில்லை.

ஆனால் அதனை அப்புறப்படுத்துவதாக நினைத்து நீரோட்டத்தின் குறுக்கே நாம் கையை நீட்டிவிடுகிறோம். ஆற்றுக்குள் கையை நீட்டினால் என்னவாகும்?.

நமது கையைச் சுற்றி, ஓடும் நீர் சுழல ஆரம்பித்துவிடுகின்றது. இப்படித்தான் நமது உணர்வுப் பிரவாகத்தின் இடையில் தடங்கல் ஏற்பட்டு, நமக்குள் போராட்டம் நிகழ்ந்து விடுகின்றது. நமது உணர்வுகள் அனைத்தும் ஆறாக ஓடுவதுதான் விடுதலை. அதுதான் முக்தி. அதுதான் நமது இயல்பு நிலை.

அதன் ஓட்டத்தின் குறுக்காக நமது கையை நுழைத்திடத் தேவையில்லை என்பதைப் புரிந்து கொள்வதுதான் ஞானநிலை. அதுதான் புரிந்துகொள்ளுதல். புரிந்து கொள்ளும் வரை தான் நமக்கு வேலையும், பொறுப்பும் உள்ளது.

நாம் புரிந்து கொண்டதைச் செயல்படுத்தத் தேவையில்லை. புரிந்துகொண்டதோடு நமது வேலை முடிந்துவிடுகிறது. ஞானம் பெறுதலோடு நமது வேலை முடிந்துவிடுகிறது.

ஆனால் நாம் ஏற்கனவே பார்த்தபடி, ஞானம் நம்முடைய இறுதி நிலையல்ல. முக்திதான் இறுதிநிலை. விடுதலைதான் இறுதிநிலை.

அதனால் பலரும் இந்த முக்தி நிலையையே ஞானநிலை எனப்பெயரிட்டு விளக்கம் கொடுத்துவிடுகின்றனர். அந்த விடுதலையைப் பற்றி விவரிக்கும் போது,

"இது விவரிக்கமுடியாத நிலை, இது மனம் கடந்த நிலை, மனதுக்கு உட்படாத நிலை, இங்கு அனுபவமும் கிடையாது, அனுபவிப்பவனும் கிடையாது. அனுபவம் கடந்த இயக்கம் மட்டுமே இங்கு உண்டு. இது என்றென்றும் புதியது. இது நான் அற்றநிலை. இங்குகாண்பவன் - காணப்படும்பொருள் - காட்சி என்ற திரிபுடி கிடையாது. இங்கு அனைத்தும் ஒன்றே. நானே பிரபஞ்சமாகவும், பிரபஞ்சமே நானாகவும் இருக்கிறேன், இங்கு இன்பமும் துன்பமும் ஒன்றே, இங்கு நல்லதும் கெட்டதும் ஒன்றே. உயர்ந்ததும் தாழ்ந்ததும் ஒன்றே. மனிதனும், மிருகமும் ஒன்றே, புனிதமானதும், இழிந்ததும் ஒன்றே. அனைத்தும் மெய்ப்பொருளே. சர்வமும் பிரம்ம மயமே." - இப்படி விளக்கிவிடுகிறார்கள்.

இதை அடைய முடியுமா? இதை அடைவது எவ்வாறு? ஒரு சிறிய உதாரணம்.

ஆழமான ஒரு குளம். அதன் ஒரு பக்கம் மட்டும் இறங்கிக் குளிக்கும் வகையில் படிக்கட்டுகள். குளம் நிறைந்த நிலையில் தண்ணீர். குளத்தின் மையத்தில் தண்ணீரின் அடி ஆழத்தில், விலை உயர்ந்த ஆபரணம் ஒன்று மூழ்கிக் கிடக்கின்றது. அதை நாம் எடுக்கவேண்டும். படிக்கட்டுகளின் வழியே குளத்தினுள் இறங்குகின்றோம். நாம் இறங்க இறங்க, நமது உடலும் கொஞ்சம் கொஞ்சமாக தண்ணீருக்குள் அமிழ்ந்திட ஆரம்பிக்கின்றது. நாம் தண்ணீருக்குள் இருக்கும் படிக்கட்டுகளில் மேலும் இறங்குகின்றோம். தண்ணீர் நமது மார்பளவுக்கு வந்து விடுகின்றது. மேலும் இறங்குகின்றோம். தண்ணீர் கழுத்தளவுக்கு வந்துவிடுகின்றது. பிறகு நமது நாசியளவுக்கு வந்துவிடுகின்றது. நாசிக்குள் தண்ணீர் நுழையா வண்ணம், விரல்களால் மூக்கை அடைத்துக்கொண்டு மேலும் இறங்குகின்றோம். இப்போது நமது தலையும் நீருக்குள் அமிழ்ந்துவிடுகின்றது. மேலும் படிக்கட்டில் இறங்குகின்றோம். ஆனால் இறங்கமுடியவில்லை. நீரின் மிதப்பு சக்தியானது நம்மை மேல்நோக்கித் தள்ளுவதால், அதற்குப்பிறகும் நம்மால் இறங்கமுடியவில்லை. இனி நாம் என்ன செய்வது?

இதற்குப் பிறகும், நமது கால்களைப் பயன்படுத்தி இறங்கி, அடியாழத்துக்குள் போகமுடியாது. இனி நாம் தலைகீழாகத் திரும்பி, கைகளால் நீந்தித் தான் அடியாழத்துக்குள் போகமுடியும்.

ஞானம் என்பது, நமது அறிவைப் பயன்படுத்தி படிப்படியாக - அறிவுப்பூர்வமாக முயற்சி செய்வது. "இதற்கு மேலும் போகமுடியாது" என்ற எல்லைவரை பயணம் செய்து, நமது அறிவு அல்லது முயற்சியின் இயலாமையைப் புரிந்து கொள்வது. இது தான் ஞானம். இது அறிவுபூர்வமானது. தர்க்க ரீதியானது. ஒழுங்கு முறைக்கு உட்பட்டது. புரிந்து கொள்ளக்கூடியது.

ஞானத்தை அடைவது வரை நாம் அறிவுபூர்வமாக முயற்சி செய்யலாம். ஆனால் நம்முடைய எந்த முயற்சியானாலும் விடுதலையை அடையமுடியாது.

முயற்சியைப் புறக்கணித்த நிலையில், - நமது யதார்த்த இயல்பு நிலையே விடுதலை தான்.

முக்தி நிலைக்கு 'ஞானம்' எனப்பெயரைக் கொடுத்து பலரும் அதனைத் தேடுவதால், ஞானத்தையும் அடையமுடிவதில்லை. முக்தி நிலையிலும் இருக்கமுடிவதில்லை.

ஆன்மீக உலகில் உயர்வாகப் பேசப்படும் சரணாகதி நிலையும், ஞானநிலையும் ஒன்றே. இரண்டும் வேறு வேறல்ல. எல்லாப் பொறுப்புகளையும் இறைவனிடம் ஒப்படைத்துவிடுவதன் மூலம், நாம் எந்தப் பொறுப்புகளையும் எடுத்துக்கொள்வதில்லை. இதுதான் சரணாகதி.

நமது முயற்சியின் இயலாமையையும், முட்டாள்த்தனத்தையும், அறிவுபூர்வமாகப் புரிந்து கொள்வதன் மூலம், நாம் எந்தப் பொறுப்புகளையும் எடுத்துக் கொள்ளாமலிருப்பது ஞானம்.

ஞானம் என்பது, படிக்கட்டுகளின் வழியாக குளத்தினுள் இறங்கி நமது இயலாமையைப் புரிந்து கொண்டு தன்னை இழப்பது; பொறுப்புகளை இழப்பது. சரணாகதி என்பது, படிக்கட்டுகளின் பக்கம் போகாமல், தலைகீழாகத் தண்ணீரில் குதித்து விடுவது. எந்தப் பொறுப்புகளையும் எடுக்காமல் தன்னைப் புறக்கணித்துவிடுவது.

விடுதலையை முயற்சித்து அடையமுடியாது. அறிவுபூர்வமாக முக்தியை அணுகமுடியாது. 'அனைத்தையும் சமமாகப் பார்ப்பேன். நான் அற்றநிலையில் இருப்பேன். அனைத்தையும் இறைவனாகப் பார்ப்பேன்' என்று முயற்சி செய்வது, படிக்கட்டின்மேல் தலைகீழாகக் குதிப்பதை போன்றதே. அடிப்பட்டு மண்டை உடைவதற்குத் தான் சாத்தியம் ஆகும். அறிவு பூர்வமாக அணுகி, நமது இயலாமையை உணர்ந்து கொள்ளுவது எளிது. இதுதான் ஞானம். நமது முயற்சியை ஞானம் அடைவதோடு நிறுத்திக்கொள்ளவேண்டும்.

விடுதலை என்பது அறிவுக்கு விரோதமானது. Liberation is illogical. அதற்கு முயற்சி செய்வது விவேகமற்றது. விடுதலை என்பது இயற்கையானது. அதை அடையத் தேவையில்லை. அதனோடு போராடாமல் இருந்தால் மட்டுமே போதும். ஞானத்தையும், விடுதலையையும் பிரித்துப் பார்த்து, எது ஞானம், எது விடுதலை எனப் புரிந்துகொள்வோமாயின்,

ஞானம் என்பது மிக மிக எளிது.

விடுதலை என்பது அதனினும் எளிது. ஏனெனில், ஞானத்தை அடைவதற்காவது நாம், ஆய்ந்து முயற்சி செய்து புரிந்து கொள்ளவேண்டும்.

விடுதலை என்பது அடைய வேண்டிய ஒரு நிலையே அல்ல. முயன்று சாதிக்கவேண்டிய ஒரு நிலையே அல்ல. நமது முயற்சிகளின் மூலம், நாம் நமது விடுதலையோடுதான் முரண்பட்டுக் கொண்டிருக்கிறோம்.

இந்தக் கணத்தில் நாம் எப்படி இருக்கிறோமோ,

அது தான் விடுதலை.'இந்தக் கணத்தை, எந்த மாற்றமும் செய்யாது, ஏற்றுக் கொள்வதைத் தவிர நமக்கு வேறு எந்த வழியும் கிடையாது' - என்பதைப் புரிந்து கொள்வது தான்

- ஞானம்.

நாம் இருக்கும் இந்தக் கணத்தில், நமக்குள் மகிழ்ச்சியான உணர்வு வெளிப்படலாம்; துக்கமான உணர்வு வெளிப்படலாம். அது எத்தகைய உணர்வாக இருந்தாலும் சரி, நமக்கு ஏற்படும் ஒவ்வொரு அனுபவமும். 

# ஆசிரியர் பகுதி

அன்பார்ந்த வாசகப் பெருமக்களுக்கு,

வணக்கம். அடிமேல் அடி எடுத்து வளரும் பகவத் பாதைக்கு அன்றாடம் வருகிறது பாராட்டு ஓலை.

உங்கள் கருத்துகளை வாய்மொழியாக மட்டும் கூறாமல் எழுத்து வடிவிலும் அனுப்பினால் மற்றவரும் பயன் பெறலாம்.

வருகின்ற கட்டுரைகள் பல ரகம்; பல தரம். ஒவ்வொன்றும் எழுதுபவர்களின் இயல்புக்கும், சூழ்நிலைக்கும், ஆன்மீக வளர்ச்சிக்கும் ஏற்ற வகையில் தானே அமைய முடியும். அதை வாசிக்கும் அன்பர்கள் ஒரு கண்டிப்பான அளவு கோலை வைத்து அளவிடாமல், எழுதுபவர்களின் தன்மையைப் புரிந்துகொண்டு, விட்டுக்கொடுத்தலோடு விமர்சனம் செய்யுமாறு கேட்டுக்கொள்கிறோம். வளர்கின்ற மாணவனை வளர்க்கின்ற ஆசிரியரைப் போல, குறை நீக்கி நிறை சேர்க்கும் வண்ணம் செயல்படுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

பல்வேறு கருத்துகளின் சங்கம மேடை இந்த 'பகவத் பாதை'. ஒன்றாய்க் கூடி வளர்ப்போம். ஒன்றாய்க் கூடிப் படிப்போம். ஒன்றாய்க் கூடி வளர்வோம்.

பகவத் ஐயா அவர்கள் சென்னையில் தங்கியுள்ளார்கள். விருப்பமுள்ளவர்கள் இந்த நல் வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளலாமே.

மீண்டும் சந்திக்கும் வரை. வணக்கமும், வாழ்த்தும்.

ஆசிரியர் - A. செந்தில்நாதன், 99421 81933

## ?கேள்வி பதில்¿

**கேள்வி :** நான் என் வாழ்க்கை முழுவதும் தியானத்திற்காக ஒதுக்கிவிட்டேன், ஆனாலும், பிரச்சினை என்று வந்துவிட்டால் மன அமைதியை இழந்துவிடுகிறேன், எப்பொழுதும் மன அமைதியுடன் இருக்க வழி உண்டா?

**பதில் :** மூன்று மாதங்களுக்கு முன்பு ஓர் அம்மையாரைச் சந்தித்தேன். அந்த அம்மையார் 45 ஆண்டுகளாக ஆன்மீகப் பயிற்சிகளில் ஈடுபாடு உடையவர். அவரின் தோற்றம் காவி உடை அணிந்தும், உத்திராட்சம் மாலை அணிந்தும், பல ஆன்மீக பெரியவர்களின் உருவம்பதித்த டாலர்கள் அணிந்தும், கைகளில் தண்டை அணிந்தும் பல ராசிக் கற்கள் மோதிரம் அணிந்தும், உலகத்தின் ஆன்மீக சின்னத்திற்கான அத்தனை அடையாளங்களுடனும் இருந்தார். அவருக்கு சூன்யா அனுபவம் ஏற்பட்டதாகவும், பாபா காட்சிக் கொடுத்து இருப்பதாகவும் கூறினார். ஆன்மீக நூல்கள் பலவற்றை வைத்திருந்தார். வாழ்க்கை முழுவதும் தியானத்திற்கே ஒதுக்கிவிட்டார். நிரந்தரமாக ஆன்மீக அனுபவம் வேண்டும் என்று வாழ்க்கை முழுவதுமாக தியானத்துடன்போராடி வந்தார். ஆன்மீக சம்பந்தமாக யார் பேசினாலும், தன்னுடைய அனுபவத்தை மற்றவரிடம் உரையாடி, விவாதித்துத் தர்க்கம் ஏற்படும் நிலையே ஏற்பட்டது.

இந்த நிலையில் தான், நான் அந்த அம்மையாரைச் சந்தித்தேன். அந்த அம்மையார் தன்னுடைய கருத்தில் மட்டுமே ஆர்வமுடையவராக இருந்தார். நாம் சொல்வதைக் கேட்பதற்குத் தயராகவும் இல்லை. தன்னுடைய அனுபவம், தனக்கு ஏற்பட்ட நிகழ்வு போன்றவற்றை மற்றவர்களிடம் தெரிவிப்பதிலேயே ஆர்வமுடையவராக இருந்தார். கொஞ்சம் பொறுமையாக எவ்வளவோ எடுத்துக் கூறியும் கேட்காத நிலையில் அந்த அம்மையார் இருந்தார்.

கொஞ்ச கால நேர உரையாடலுக்குப் பிறகு ஓர் உதாரண செயல் விளக்கம் உங்களுக்குச் செய்து காட்டுகிறேன் என்று சொன்ன பிறகு, பேசுவதைக் குறைத்துக்கொண்டு செயல்முறை விளக்கத்தில் ஆர்வம் காட்டினார்.

ஒரு கண்ணாடி டம்ளர், ஒரு ஸ்பூன், டம்ளர் முழுவதும் தண்ணீர் ஊற்றி கொஞ்சம் மணல் போட்டு பிறகு ஸ்பூன் போட்டு தொடர்ந்து கலக்கிக்கொண்டே இருந்தேன். தண்ணீர் + மணல், கலந்து ஸ்பூனுடன் தொடர்ந்து சுற்றிக் கொண்டே இருந்தேன். இந்த நிலையியில் அந்த அம்மையாரைப் பார்த்து 'அம்மா தண்ணீர் தெளிவடைய நாம் என்ன செய்ய வேண்டும்' எனக் கேட்டேன். அந்த அம்மையார் பொறுமையாக யோசிக்கத் தொடங்கினார். இப்போதுதான் அந்த அம்மையார் கவனிக்கத் தொடங்கினார். தண்ணீர் தெளிய வைக்க நாம் ஒன்றும் செய்யத்தேவையில்லை. சுற்றிக் கொண்டு இருப்பதிலிருந்து நம்முடைய 'கையை' மட்டும் எடுத்துக்கொண்டால் போதும். ஸ்பூன் டம்ளரின் ஓரமாக நின்றதுமே தண்ணீர் + மணல் சேர்ந்து சுற்றிய தண்ணீர் கொஞ்சம் கொஞ்சமாக சுழற்சி குறையத் தொடங்கியது. பிறகு சுழற்சி முழுவதுமாக நின்றவுடன், மணல் தானே டம்ளரின் அடியில் படியத் தொடங்கியது. கொஞ்ச நேரத்திற்குப் பிறகு தண்ணீர் தன்னுடைய பழைய தெளிவு நிலைக்கு வந்தது. இங்கு நம்முடைய முயற்சி என்பது ஒரு துளியும் கிடையாது.

இந்தச் செயல்முறை விளக்கம் ஒன்றை நன்றாகப் புரிந்து கொண்டால் போதும். உங்களுடைய இத்தனை நாள் ஆன்மீக பயிற்சி முறைகளுக்கான முடிவான தெளிவும் உங்களுக்கே புரிந்துவிடும் என்றேன். அந்த அம்மையார் முழு கவனத்துடன் நடந்து கொண்டு இருப்பத்தைக் கவனித்துக் கொண்டிருந்தார்.

நீங்கள் தேடும் ஞானம் "சூன்யம்," அதை அடைவதற்கு ஏதாவது செயல் செய்தால் அந்த சூன்யத்தை அடையமுடியுமா.? மனதை அதன் போக்கில் விட்டுவிட்டால் தானாகவே மனதிற்கு ஆதாரமான சூன்யத்தை நோக்கிப் போகும். சூன்யத்திற்காக மனதளவில் நாம் ஒன்றும் செய்யத் தேவையில்லை. மனதளவில் நாமாக முயற்சிகளை மேற்கொள்கிறோம் என்றால் அது தண்ணீர் + மணல் இருக்கும் டம்ளரில் ஸ்பூன் கொண்டு நாமாக நன்றாகக் கலக்கிக் கொண்டே "எப்படியும் தெளிய வைத்துவிடுவேன்" என்று முயற்சி செய்வதே ஆகும். நமக்குக் கவனம் வராமல் நம்மை அறியாமல் எத்தனை முறை கலக்கினாலும் தவறு கிடையாது. அப்படிக் கலக்கியதற்கு நாம் எந்த வகையிலும் பொறுப்பும் கிடையாது. எந்த நேரம், எந்த வினாடி நாமாகத் தான் கலக்கி கொண்டு இருக்கிறோம் என்பதைத் தெரிந்து கொள்கிறோமோ, அதன் பிறகு கலக்குவதிலிருந்து விடுபட்டால் போதும். தெளிவு என்பது தானாகவே ஏற்படும் எனக்கூறப்பட்டது. விடுதலை என்பதும் தானாகவே ஏற்படும். அந்த அம்மையார் அப்படியே மௌனமாக கவனித்துக்கொண்டிருந்தார்.

அதற்குப் பிறகு அந்த அம்மையாரிடம், "நீங்கள் எந்த ஆன்மீகப் புத்தகமும் படிக்கவேண்டாம், தியானம் செய்ய வேண்டாம், கோயில்களுக்குச் செல்ல வேண்டாம். உங்களுடைய ஆன்மீக அடையாளங்கள் அத்தனையையும் மூன்று மாதங்கள் ஒதுக்கி வைத்துவிட்டு மனதை அதன் போக்கில் விட்டுவிட்டு, புற விசயத்தில் மட்டும் கவனம் செலுத்துங்கள்" என்று கூறினேன்.

"நீங்கள் 45 ஆண்டுகளாக முயற்சி செய்தும் கிடைக்காத ஞானத்தெளிவு, வரும் மூன்று மாதத்திற்குள் உங்கள் மனம் ஏற்றுக் கொள்ளும்படியாக தெளிவு கிடைப்பதாக இருந்தால், இதன்படி வாருங்கள். இல்லை என்றால் உங்களுடைய பழைய அனுபவத்தைத் தொடருங்கள்" என்றும் கூறினேன்.

பிறகு அந்த அம்மையாரும் தன்னுடைய மகான்களின் டாலரும், உத்திராட்சம், காவி உடைகள் ராசிகற்கள் மோதிரம் என அனைத்தையும் கழட்டி ஒரு பையில் போட்டு வைத்துவிட்டார்கள். '3 மாதத்திற்குப் பிறகு தேவை என்றால் எடுத்துப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்' என்று கூறியதற்கு அவர்களின் முகத்திலிருந்த இறுக்கம் தளர்ந்து மலர்ச்சி ஏற்பட்டது.

அந்தப் பெண்மணி எனக்கு ஒரு குரு வேண்டும் எனக் கேட்டார். அதற்கு அதே கண்ணாடி டம்ளர் + தண்ணீர் + மண் + ஸ்பூன் ஒன்றை உங்கள் கண்களில் படும்படி பார்த்துக் கொள்ளுங்கள். எப்போதெல்லாம் குழுப்பம் வருகிறதோ, அப்போது எல்லாம் ஒரு கலக்குக் கலக்கி விடுங்கள், பிறகு தெளிவு ஏற்படுவதைக் கவனியுங்கள். இனிமேல் இது தான் உங்கள் குரு என்று சொல்லப்பட்டது.

ஏறத்தாழ இரண்டு மாதத்திற்குள் அந்தப் பெண்மணியிடம் நல்ல மாற்றம் ஏற்பட்டது. அமைதி என்பது தானாக வருவது; அதற்கு நாம் ஒன்றும் செய்யத்தேவையில்லை என்பதை நன்கு விளங்கிக் கொண்டு அமைதியாக இருப்பதாகக் கூறினார். அவர் தேடிய தெளிவு இதுதான் என்பதையும் நன்றாகப் புரிந்து கொண்டார்.

" விட்டாலே போதும் தெளிந்துவிடும் "




திரு. சரவணன்
செல் : 9994205880

## பாதையில் மலர்ந்த மலர்கள்

நான் ஓய்வு பெற்ற கணித ஆசிரியர். கடந்த இருபது ஆண்டுகளுக்கு மேலாக நான் வேதனை என்று பல்வேறு வகையான துன்பங்களை அனுபவித்து வந்தேன். என் வேதனைகளைத் தீர்க்க பிரசித்த பெற்ற பல கோவில்களுக்குச் சென்று வந்தேன். பலவிதப் பரிகாரங்களைச் செய்து பார்த்தேன். ஆனால் வேதனைகள் தீர்வதாக இல்லை.

இந்த நிலையில் J. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் தத்துவங்களால் ஈர்க்கப்பட்டு அவர் கூறும் "உடனடி விடுதலை"யை அடைய அவர் எழுதிய புத்தகங்களை எல்லாம் பார்த்து "முயற்சி இல்லாத விழிப்புணர்வு" (Effortless awareness)-ஐப் பெற பலவழிகளில் முயன்று தோல்வி அடைந்தேன். என்னுடைய வேதனை தீரவில்லை. விடுதலையும் கிடைக்கவில்லை.

மன வேதனைத் தொடர்ந்த நிலையில் ஒருமுறை திருவண்ணாமலை கோவிலுக்குச் செல்லும் வழியில் உள்ள ஒரு கடையில் "ஞான விடுதலை" மற்றும் "தியானத்தை விடு! ஞானத்தைப் பெறு" என்ற புத்தகங்களைப் பார்த்தேன். அவை இரண்டையும் உடனடியாக வாங்கிப் படித்தேன். படித்துக் கொண்டு இருக்கும் போதே என்னையும் அறியாமல் ஒருவித "சுமை இறங்கிய மென்மையான மனநிலை"யை உணர்ந்தேன்.

உடனே ஐயா அவர்களுக்குத் தொலைபேசியில் தொடர்பு கொண்டேன். ஐயா அவர்கள், தான் திருவண்ணாமலையில் தங்கி இருப்பதாகக் கூறினார். மறுநாள் ஐயா அவர்களைத் திருவண்ணாமலையில் சந்தித்து ஐயா அவர்களின் புத்தகங்களைப் படித்தபோது ஏற்பட்ட 'சுமை இறங்கிய மென்மையான மனநிலை' உணர்வினை எடுத்துக் கூறினேன். மற்ற சமயங்களில் அத்தகைய மென்மையான மனநிலை இல்லை எனவும் கூறினேன். அதற்கு அவர் 'தெளிவு முடிச்சு' ஏற்பட்டால் மென்மை நிலை அல்லது விடுதலை நிலை நிரந்தரமாக ஏற்பட்டு விடும் என்றார்.

'தெளிவு முடிச்சு' என்றால் என்ன என்று புரியாததால் ஐயா அவர்களைப் பலமுறை சந்தித்து விளக்கம் கேட்டேன். அதற்கு அவர் மனதின் இயக்கத்தை நன்கு ஆய்வு செய்து "தாமாக வரும் உணர்வுகளும் எண்ணங்களும் எவை?" எனவும் அவைகளுக்கு எதிராக "நாமாக முயற்சி எடுத்து செய்யும் செயல்கள் (delibrate actions) எவை?" எனவும் கண்டுபிடித்து, நாமாகச் செய்யும் செயல்களைச் செய்யாமல் இருக்குமாறு கூறினார். அவ்வாறு மனதினை ஆய்வு செய்து நாமாக எந்த எந்தச் செயல்களை முயற்சியினால் செய்கின்றோம் எனக் கண்டுபிடித்து அவைகளைச் செய்யாமல் விட்டுவிட்டேன். இப்பொழுது 'தெளிவு முடிச்சு' ஏற்பட்டு, "சுமை இறங்கிய மென்மையான மனநிலை"யில் எப்பொழுதும் உள்ளேன்.

வேதனைகளால் வாடிக்கொண்டிருந்த எனக்கு ஐயா அவர்கள் வழிகாட்டியாக இருந்து வேதனைகளில் இருந்து "விடுதலை" பெற வழிகாட்டியுள்ளார். அவருக்கு என் மனப்பூர்வமான நன்றியைக் காணிக்கை ஆக்குகின்றேன்.

நன்றி

இங்ஙனம்
கோ. சுவாமிநாதன்
வேலூர்.
செல் : 98944-16769

## பகவத் வழியும் ஹோமியோபதியும்

அரைத்த மாவை அரைத்து .......

ஒரு பெண்மணி வயது 40. அவர் சில பிரச்சனைகளுக்காக சிகிச்சைக்கு வந்தார். நெஞ்சு படபடப்பு, பயம், தூக்கமின்மை, மூச்சுமுட்டல் கவலை, எதிலும் கவனம் செலுத்த முடியாமை என்று பல தொல்லைகளைக் கூறினார்.

ஹோமியோபதி சிகிச்சை முறையில் மனதின் செயல்பாடுகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்துக் கேள்விகள் கேட்கப்படும். நோயை விட நோயுற்ற மனிதரை நலமாக்குவதே ஹோமியோபதியின்நோக்கம். நோயுற்ற மனிதரைச் சரி செய்தால், அவர் இடம் கொடுத்த நோயும் நீங்கும் என்பது அனுபவ உண்மை.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களும், நமது மனதின் தவறான செயல்பாடே நமது துன்பத்திற்குக் காரணம் என்பதை பலவாறாக விளக்கியுள்ளார்கள். மனம் அஞ்ஞான வழியில் சென்று நம்மைத் துன்பத்தில் ஆழ்த்துகிறது என்பதைப் புரிந்து கொண்டால் (விழிப்புணர்வு? – பெற்றால்) அஞ்ஞான நீக்கம் நடைபெறுகிறது. அஞ்ஞான நீக்கமே ஞானம் (இரமணர்).

ஹோமியோபதியிலும் மன மயக்கமே நோய், விழிப்பறிவே நலம் (Delusion is disease, Awareness is cure) என்பர்.

சிகிச்சைக்கு வந்த பெண்மணியிடம் அவரது தொல்லைகள் எவ்வளவு காலமாக உள்ளன என்று ஹோமியோபதி மருத்துவர் கேட்டார். அதற்கு அவர் சுமார் 11/2 ஆண்டு காலமாக உள்ளன என்றார்.

"அதற்கு முன் மனம் பாதித்த நிகழ்வு ஏதும் உண்டா?"

"ஆம், ஒரு முறை வேறு ஊரில் கல்லூரியில் படிக்கும் மகளை இரயில் ஏற்றச் சென்றிருந்தேன். நாங்கள் தாமதமாகச் சென்றோம். நாங்கள் நடை மேடையில் நுழையும் போதே இரயில் கிளம்பிவிட்டது. என் மகள் ஓடிப்போய் ஏதோ ஒரு பெட்டியில் ஏற முயன்றாள். தன் கைப்பையை இரயிலுக்குள் வீசிவிட்டு, கம்பியைப் பிடித்து ஏற முயன்றாள். அப்போது கால் தவறி படக்கென்று சரிந்தாள். நான் அந்த காட்சியைக் கண்டு பதைபதைத்து 'வீல்' என்று அலறிவிட்டேன். ஆயினும் இரயில் படியோரம் நின்றிருந்த சில வாலிபர்கள் அவளைப் பிடித்து உள்ளே ஏற்றிவிட்டனர். அவள் பாதுகாப்பாகப் போய்விட்டாள். ஆயினும், எனக்கு அந்தக் காட்சி மனதை விட்டு நீங்காமல் அப்படியே இருக்கிறது."

"இப்பொழுது நீங்கள் அதிகமாகச் சிந்திக்கும் விஷயம் என்ன?"

"எனக்கு எப்போதும் என் மனதின் கவலைதான். மகள் எந்த பஸ்ஸில், இரயிலில் ஏறுகிறாளோ? பத்திரமாக இருப்பாளா? ஏதேனும் ஆபத்தில் மாட்டிக்கொள்வாளா?" இதே சிந்தனை தான். இப்போதெல்லாம் வீட்டில் உள்ளவர்கள் யாரேனும் (மகனோ, கணவரோ) வண்டி எடுத்துக்கொண்டு வெளியில் சென்றாலும் அவர்கள் பத்திரமாக வீடு திரும்பும் வரை ஒரே பதைபதைப்புத் தான்.

மருத்துவர் அவரிடம் கேட்டார். "அந்த நிகழ்ச்சி எத்தனை முறை நடந்தது?""ஒரு முறை தான்" "நீங்கள் அதை எத்தனை முறை யோசித்துப் பார்க்கிறீர்கள்?"

"கணக்கே இல்லை தினம் நூறு தடவை, ஆயிரம் தடவை... அதைத் தவிர சிந்தனையே இல்லை..."

(ஒரு முறை) அந்த நிகழ்ச்சியை நேரில் காணும் போது பதைபதைப்பதும், படபடப்பாவதும், பயந்து அலறுவதும் எல்லா மனிதர்களுக்கும் இயல்பான ஒன்று தான். அந்தப் பயம் அந்தச் சூழ்நிலைக்குத் தேவையான ஒன்றும் கூட. மீண்டும் சில சமயங்களில் தானாக நினைவுக்கு வரும்பொழுது (Thought- எண்ணம்) பயம் வருவதும் இயல்புதான்.

ஆனால், அந்த நிகழ்ச்சியை – சிந்தனையாக (Thinking) மாற்றி அதற்கு உயிர் கொடுத்துக்கொண்டே இருப்பது நம் மனது கடைப்பிடிக்கும் அஞ்ஞான வழியாகும்.

ஒவ்வொரு முறையும் ஒரு எண்ணம் – கோபம், பயம், வருத்தம், பொறாமை, வெறுப்பு, ஆசை – வரும்பொழுது நமது சக்தி கொஞ்சம் செலவாகிறது. அதையே திரும்பத் திரும்பச் சிந்தித்து, அந்த எண்ணத்திற்கும். அதன் விளைவாக வரும் உணர்வுகளுக்கும் உயிர் கொடுக்கும் போது சக்தி வீணாகிக் கொண்டேயிருக்கிறது.

ஒரு முறைக்கு 10 கலோரி ஆற்றல் வீணாகிறது என்று வைத்துக்கொண்டால், ஓராயிரம் தடவை, ஒரு லட்சம் தடவை அதனை யோசிக்கும் பொழுது நமது ஆற்றல் கணக்கின்றி வீணாகிறது.

நமது ஆற்றல் வீணாகி, நாம் பலவீனமடையும் பொழுது, நம் உடலின் எதிர்ப்பு சக்தி குறைகிறது. நம் உடல் பல நோய்களின் தாக்குதல்களுக்கு இடம் கொடுக்கிறது. நமக்குநோய்கள் ஒன்றின் மேல் ஒன்றாக வரத் தொடங்குகின்றன. மனத்துயரம், உடல் துன்பம், பொருள் விரயம், கால விரயம் ..... தொடர்கதையாகிறது.

நிகழ்ச்சி நடந்தது ஒரு முறைதான். அதற்கு ஏற்ற உணர்வு – நம் இயல்புக்கு ஏற்ப வெளியாவதும் சரியே. மீண்டும் அந்த நினைவு வரும்பொழுதும், உணர்வு வருவதும் இயல்பே. ஆனால் அதையே ஆயிரம் முறை, ஒரு லட்சம் முறை யோசித்து நம்மைப் பலவீனப்படுத்திக் கொண்டு, நம்மை நாமே நோயாளியாக்கிக் கொள்கிறோம்.

ஹோமியோபதியில் இது போல் ஒரே விஷயத்தில் சிக்கிக்கொண்டவர்களையும் அல்லது பல பாதிப்புகளின் தொகுப்பில் சிக்கிக் கொண்டவர்களையும் மருந்தளித்து சிறப்பான சிகிச்சை மூலம் நலமாக்கவும் முடியும். ஆனால் பகவத் வழி என்பது, இருப்பதையும், சரி செய்யும், வருவதையும் தடுக்கும். அஞ்ஞான நீக்கத்தின் மூலம் மனம் ஒரு விஷயத்தில் சிக்கிக்கொள்வதைத் தடுத்து, ஒருவர் நோயாளியாவதிலிருந்தும் பாதுகாக்கும். ஆயினும், முடமாகிப்போன மனதிற்கு ஞானத் தெளிவை வழங்க முடியாது. அந்த மனதைச் சரி செய்து, ஒருவர் எடுத்துச் சொல்வதைப் புரிந்துகொள்ளும் தன்மை அடைவதற்குச் சிகிச்சை அவசியம் என்பார் ஐயா. அதற்கு ஹோமியோபதி சிறப்பாக உதவி செய்யும். பிறகு, பகவத் வழி இன்னும் சிறப்பாகச் செயல்படும். இவை இரண்டும் ஒன்றுக்கொன்று துணையாய் நிற்கும். சில சமயங்களில் இரண்டு வழியும் ஒரே நேரத்தில் வழங்கும் போது, நலம் விரைவாகவும், சிறப்பாகவும் நடப்பதையும் பார்க்கிறோம்.

நேற்று நடந்ததை நினைத்துப் பார்ப்பதும் கற்பனை. இதுவே நாளை நடக்குமோ என்று நினைத்துப் பார்ப்பதும் கற்பனை. இல்லாத ஒன்றைக் கற்பனை செய்து செய்து நாம் பலவீனமாகி நோயாளியாவதற்குக் காரணம் (ஒரு முறை) நடக்கும் நிகழ்ச்சிகள் அல்ல – மாறாக, நம் மனதின் அஞ்ஞானக் கற்பனைகளே (Delusion) காரணம்.

நாம் நோயாளி ஆனதற்கு மனதை ஒருமுறை பாதித்த நிகழ்ச்சியோ, மனிதரோ காரணமா? அல்லது அதையே நாம் ஒரு லட்சம் தடவை யோசித்தது... அரைத்த மாவையே அரைத்து, புளிப்பேறிப் போனதே காரணமா?

நாம் ஒரு லட்சம் தடவை யோசித்தது தான் காரணம். அப்ப என்ன செய்யலாம்?

"இப்படி நினைக்கக் கூடாதுன்னு தான் நினைக்கிறேன் சார் .... ஆனா அது தான் திரும்பத் திரும்ப நினைவுக்கு வருது".

அடக்குவதாலும், ஆதரிப்பதாலும் அந்த உணர்வுளை நீக்க முடியாது. மாறாக அவை வலுப்பெறும்.

இதற்குத் தீர்வாக, ஸ்ரீ பகவத் அவர்கள் காட்டிய வழியில் செல்வதுதான் நலம். தன் இயல்பாகத் தோன்றிய எண்ணங்களை நம்மால் ஏதும் செய்ய முடியாது என்பதைப் புரிந்து கொண்டு அவை தன்னியல்பாய் தாமே ஓடி மறைய அனுமதிப்பதே நமக்கு விடுதலை தரும்.

நாம் அதை நீக்கவோ, ஆதரிக்கவோ செய்யும் எந்த ஒரு சிறு முயற்சியும் அந்த நினைவுக்கும் உணர்வுக்கும் உயிர் கொடுத்து விடும்.

தானே தீர்ந்திருக்க வேண்டிய பயத்தை, கோபத்தை, வருத்தத்தை, ஏமாற்றத்தை, வெறுப்பை - தீராத உணர்வாக மாற்றும் அஞ்ஞானத்தைப் புரிந்து கொள்வோம்.

ஞான வழி என்னும் எளிய, இனிய வழியை மேற்கொள்வோம். வாழ்வை நோயற்றதாக்குவோம். வாழ்வை இனிமையாக்குவோம்.

சொர்க்கம், கைலாசம், வைகுந்தம் - எல்லாம் இங்கேயே உள்ளதைப் புரிந்து கொள்ளுவோம்.

அஞ்ஞானத்திலிருந்து விடுதலையே முக்தி தரும் என்பதை அனுபவித்து அறிவோம் .....

Dr. N. கைலாசம் செல் : 94432-90559.
தலைவர், ஸ்ரீ பகவத் மிஷன் சேலம்.

## உடல் ஆரோக்கியத்துக்கான ஓர் உன்னத நூல்

திருச்சியில் சென்ற மாதம் 24 மற்றும் 25-ம் தேதிகளில் Hr. பாஸ்கர் அவர்களின் "அனடாமிக் செவிவழித் தொடு சிகிச்சை 2012" என்ற புதிய நூல் வெளியீட்டு விழா நிகழ்ச்சிகள் சிறப்பாக நடைபெற்றன. நிகழ்ச்சி ஆரம்பிக்கும் பொழுது ஓர் ஆச்சர்யமான விஷயம் நடந்தது. Hr.பாஸ்கர் அவர்கள் அனைத்துத் தன்னார்வ தொண்டர்களையும் மேடைக்கு அழைத்தார். மைக்கை கைகளில் யேந்தி அவர் கூறியது, "இது போன்ற கூட்டங்களுக்கு VIP.களைத் தான் கூப்பிடுவார்கள். ஆனால் இந்நிகழ்ச்சிக்கு உண்மையான VIP.கள் இந்தத் தன்னார்வத் தொண்டர்கள் தான். இவர்களைக் கௌரவிப்பதுதான் நியாயம்" என்று சொல்ல அரங்கமே கைத்தட்டல்களால் அதிர்ந்தது. பிரபல ஆங்கில எழுத்தாளர் SHIVKERA (சீவ்கேரா) கூறுவார்,

"வெற்றியாளர்கள் வித்தியாசமான செயல்களைச் செய்வது இல்லை. அவர்கள் தாங்கள் செய்வதையே வித்தியாசமாகச் செய்கிறார்கள்", இது நமது Hr.பாஸ்கர் அவர்களுக்கு முற்றிலும் பொருந்தும். அன்று அவர் வெளியிட்ட அனாடமிக் புத்தகம் அன்றே விற்பனையாகி சாதனை படைத்தது. இவரால் உலகத்துக்கு அர்ப்பணிக்கப்பட்ட உடலின் உண்மை இயக்கத்தை விவரிக்கும் அற்புத நூல் தான் "அனடாமிக் செவிவழித் தொடு சிகிச்சை 2012".

நாம் செய்ய வேண்டியதெல்லாம் திறந்த மனதுடன் முழுக் கவனத்துடன் இந்தப் புத்தகத்தைப் படிப்பது மட்டுமே.

நோயின் தன்மையைப் பற்றிய பயம் இவரது எளிய விளக்கத்தினால் விடுதலை அடைகிறது. நாம் நோயின் எந்த நிலையில் இருந்தாலும் பரவாயில்லை. எளிமையான இந்த அணுகுமுறையை முறையாகக் கையாண்டால் போதும் ஆரோக்கியம் நிச்சயம் உண்டு.

முதலில் நாம் ஆரோக்கியம் அடைந்து, பிறகு சமுதாயத்திலிருக்கும் ஒவ்வொருவருக்கும் கொண்டு சேர்ப்பது என்பது ஒவ்வொரு மனிதனின் தார்மீகக் கடமை ஆகும்.

ஒவ்வொரு வீட்டிலும் இருக்கவேண்டிய டாக்டர் தான் "அனடாமிக் - செவிவழி தொடு சிகிச்சை 2012" எனும் புத்தகம்.

இது ஒரு பிரவாகம் பப்ளிகேஷன் வெளியீடு

## ஹீலர் பாஸ்கர் அவர்களின் DVD & நூல் கிடைக்கும் இடம்

கோவை - திரு. ஸ்ரீனிவாசன் செல் : 80566-44944 * ஈரோடு - திரு. M.K.G. செல்வராஜ், செல் : 94422-39996. * வேதாரண்யம் - சுவாமி உமாசங்கர் புத்தக கடை செல் : 99650-14449 * திண்டுக்கல் - திரு. பிச்சை ஐயா செல் : 91501-49122, 91503-11142. * திருப்பூர் - V. முத்துகிருஷ்ணன் செல் : 95666-03222, 95666-50872 சிவகங்கை - நேரு செல் : 97863-91444 * கரூர் -கதர் பவன் செல் : 99440-83633 * சென்னை - மைலாப்பூர் மணி ஜெராக்ஸ், செல் : 94440-22369, 97909-60369 * சென்னை - ரவி, செல் : 94442-64170 * சென்னை - குரு, செல் : 95665-58566 * பொள்ளாச்சி - S. குமார், செல் : 98652-87123 * திருநெல்வேலி - R.P. சந்திரன், செல் : 94435-07349 * கொடைக்கானல் - சேதுராமன், செல் : 99769-08690 * அவினாசி - பழனிசாமி, செல் : 97872-87777, 98941-72776 * பாண்டிச்சேரி - ராஜேந்திரன், செல் : 99943-98249 * ஒசூர் - செந்தில், செல் : 94432-11667 * மலேசியா -வெண்ணிலா கனகசுப்புரத்தினம், செல் : 012-6646107 * குமாரபாளையம் - தனசேகரன், செல் : 98425-76640 * சேலம் - பிரவாகம் பப்ளிகேஷன்ஸ், செல் : 97891-65555. * திருவண்ணாமலை - பிரசன்னா, செல் : 9884381766 * திருச்சி - சரண்குமார், செல் : 98940-12639 * உடுமலைப்பேட்டை - தயாநிதி, செல் : 93630-30619 * விருதுநகர் - கண்ணன், செல் : 99942-11644 * மதுரை - தேவதாஸ்காந்தி ஐயா, செல் : 99440-83633

## ஐயாவுடைய நிகழ்ச்சி

29-04-2012 ஞாயிற்றுக்கிழமை

### தஞ்சாவூர்

இடம் : ஸ்பாட்டிக்ஸ் மெட்ரிக் மேல்நிலைப்பள்ளி,
மருத்துவக் கல்லூரி முதல் கேட், தஞ்சாவூர்.
காலை 10 to 1 மணிவரை - சத் சங்கம்
ஏற்பாடு : ரெய்கி மாஸ்டர் T.K. சதானந்தம், செல் : 98947-26162
திரு. M. முருகேசன், செல் : 98437-05119

### கும்பகோணம்

இடம் : ரோட்டரி கலாச்சார மையம், காந்தி பார்க் எதிரில், கும்பகோணம்.
மாலை 5 to 8 மணிவரை - சத் சங்கம்
ஏற்பாடு : திரு. தர்மதுரை, செல் : 94430-86540
திரு. சீனிவாசன், செல் : 88701-11695

13-05-2012 ஞாயிற்றுக்கிழமை

### சென்னை

தலைப்பு : தன்னை அறியும் ஞானம்
நேரம் : மாலை 5 to 8 மணிவரை
இடம் : திருமால் திருமண மண்டபம்,
64, பழைய MTH சாலை, வெங்கடபுரம்,
முருகன் கோவில் அருகில், அம்பத்தூர், சென்னை-600 053.
தொடர்புக்கு : திரு. சுகுமார் ஸ்ரீனிவாசன், செல் : 98840-97438

## சென்னையில் ஐயாவை சந்திக்கும் முகவரி :

**ஸ்ரீ பகவத்,** கதவு எண். பழைய எண். 107, (புதிய எண் : 77) நித்தியானந்தன் தெரு, வாசுதேவன் நகர், (காசி தியேட்டர் பின்புறம்), ஜாபர்கான்பேட்டை,. (அசோக் நகர்), சென்னை-600083. செல் : 99442-15677

# ஜென்கதை

## "சும்மா இருப்பது எப்படி?"

ஒரு மடத்தில் "சும்மா இருப்பது எப்படி?" என செய்முறை விளக்கம் தருமாறு அங்குள்ள மாணவர்களுக்கு அந்த மடத்து குரு ஒரு பரீட்சை வைத்தார். எந்த மாணவன் சிறந்த விளக்கம் கொடுக்கிறானோ, அவனே ஜென்னை உணர்ந்தவனாவான் என்றும் அவர் சொன்னார்.

எல்லா மாணவர்களும் சுறுசுறுப்பாய், சும்மா இருப்பதற்குண்டான வழிகளைப் பற்றி யோசிக்க ஆரம்பித்தார்கள். சிலர் தரையில் படுத்து சும்மா இருந்தார்கள். சிலர் தியானம் செய்வது மாதிரி சும்மா இருந்தார்கள். இன்னும் சிலர் மலைகள், காடுகள் என்று போய் சும்மா இருப்பதைச் செய்து காண்பித்தார்கள்.

ஆனால் ஒரே ஒரு மாணவன் மட்டும் சும்மா இருக்க எந்த முயற்சியும் எடுக்காமல், தன்னுடைய வேலைகளை எப்போதும் போல் செய்துகொண்டிருந்தான். போட்டியின் முடிவு நாள் வந்தது. குரு முடிவைச் சொன்னபோது எல்லோருக்கும் அதிர்ச்சி.

எந்த முயற்சியும் எடுக்காத அந்த மாணவனே ஜென்னை உணர்ந்தவன் என்றும் வெற்றி பெற்றவன் என்றும் அறிவித்தார். இதை ஏற்காமல், எல்லா மாணவர்களும் குருவின் அறைக்குப்போய் விளக்கம் கேட்டார்கள். இதற்கு குரு,

"நீங்கள் எல்லோரும் சும்மா இருப்பதைப் பற்றி சிந்தித்துச் சிந்தித்து, எப்படியெல்லாமோ சும்மா இருக்க முயற்சி செய்தீர்கள்... நீங்கள் எடுத்த முயற்சியிலேயே நீங்கள் சும்மா இருக்கத் தவறிவிட்டீர்கள் .... ஆனால் எந்த முயற்சியும் எடுக்காமல், அந்தந்த நேரத்தில் தன்முன் வரும் வேலைகளை செய்தபடி உண்மையாகவே சும்மா இருந்து காட்டியது இவன் மட்டுமே" என்று கூறினார் குரு.

ஆக சும்மா இருப்பது என்பது மனதால் சும்மா இருப்பது. மனம், நடந்து முடிந்துபோன விஷயத்துக்கும், இனி வரப்போகிற விஷயத்திற்கும் குழப்பமடையாமல் இருப்பதே சும்மா இருப்பது.






**Book packet** containing printed books

*If undelivered please return to:*




**SRI BAGAVATH MISSION**
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**Dr. N. Kailasam : 94432 90559**
**V. A. P. Sharavanan : 99942 05880**
**K. S. Jeevamani : 97891-65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

*To*

Published by Shri. V.A.P.Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem - 636 003. Tamilnadu,INDIA.
Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem - 636 003. Editor : Shri. A.Senthilnadhan, cell : 99421 81933.